உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

# திருக்கானப்பேர்.

## (தலவரலாறு—திருமுறை)



தேவகோட்டை,
"தருமபுர ஆதீன வித்துவான்" பாலகவி
வயிநாகரம்
திரு. வே. இராமநாதன் செட்டியாரால்
தொகுக்கப் பெற்றது.



வெளியிட்டோர் :
தி. ராம. தி. திண்ணப்ப செட்டியார்,
சுந்தரேசப்பிரபு வீடு,
தேவகோட்டை.

உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

# திருக்கானப்பேர்.

## (தலவரலாறு—திருமுறை)








தேவகோட்டை,
"தருமபுர ஆதீன வித்துவான்" பாலகவி
வயிநாகரம்
திரு. வே. இராமநாதன் செட்டியாரால்
தொகுக்கப் பெற்றது.



வெளியிட்டோர்:
தி. ராம. தி. திண்ணப்ப செட்டியார்,
சுந்தரேசப்பிரபு வீடு,
தேவகோட்டை.

முதற் பதிப்பு 1947.

இரண்டாம் பதிப்பு 1959.

மூன்றும் பதிப்பு 1961.

திருக்கானப்பேர் எனும் காளையார்கோவில் என்ற இத்திருத்தலம், சிவகெங்கை இரயில் நிலையத்திலிருந்து கிழக்கே பத்தாவதுமைலிலும், தேவகோட்டையிலிருந்து மேற்கே தேவகோட்டை – மானுமதுரைப் பாதையில் இருபதாவது மைலிலும், மதுரை – தொண்டிப்பாதையில், மதுரையிலிருந்து நாற்பதாவது மைலிலும் அமைந்திருக்கிறது. பஸ் வசதிகள் உண்டு.



அச்சிட்டோர் : வஸந்தா பிரஸ், தேவகோட்டை.

32-1

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்.

# திருக்கானப்பேர்த் தலவரலாற்றுச் சுருக்கம்.

மங்கலப் பாண்டி வளநாட்டில், பரங்கருணைத் தடங்கடலாகிய சிவபெருமான் ஆன்மாக்கள், உய்யத் திருக்கோயில் கொண்டெழுந்தருளி யிருக்குந் திருத்தலங்கள் பலவற்றுள், சைவ சமய பரமாசாரியர்களாகிய சம்பந்தர், அப்பர், சுந்தரர், ஆகிய பெருமக்களின் திருப்பதிகங்களாற் சீர்த்தி பெற்று விளங்குவன, பதினன்கு திருத்தலங்களாகும். அவை திருவாலவாய், திருப்புனவாயில், திருக்குற்ருலம், திருவாப்பனூர், திருவேடகம், திருநெல்வேலி, திருவிராமேச்சுரம், திருவாடானை, திருப்பரங்குன்றம், திருச்சுழியல், திருப்புத்தூர், திருக்கானப்பேர், திருக்கொடுங்குன்றம், திருப்பூவணம் என்பனவாம்.

இவற்றுள் மூர்த்தி, தலம், தீர்த்தம் மூன்ருலும் சிறப்புற்று விளங்குவது திருக்கானப்பேர். இத்தலம் தெட்சிணகாளிபுரம், சோதிவனம், மந்தாரவனம், மோட்சப்பிரதம், சைவக்ஷேத்திரம், காந்தாரம், தவசித்திகரம், தேவதாருவனம், பூலோக கைலாசம், அகத்திய க்ஷேத்திரம், மகா காளபுரம் என்பன முதலாகப் பல திருப்பெயர்களைக் கொண்டது காளையார்கோயில் என வழங்கப்பெறுவது. இங்குள்ள தீர்த்தங்கள் சிவகங்கைக் காளி தீர்த்தம், விஷ்ணு தீர்த்தம், சரசுவதி தீர்த்தம்,

கௌரி தீர்த்தம், இலக்குமி தீர்த்தம், திக்குப் பாலகர் தீர்த்தங்கள், சுதரிசன தீர்த்தம், உருத்திர தீர்த்தம், சந்திர புட்கரணி முதலியனவாம்.

இத்தலத்தின் பெருமை, சிவபெருமானல் உமாதேவி யாருக்குத் திருவாய் மலர்ந்தருளப் பெற்ற பொழுது, கேட்டுக்கொண்டிருந்த முருகப் பெருமான் அகத்திய முனிவருக்குக் கூற, அவர் உதங்க முனிவருக்கு உரைக்க அவர் சதாநீக மகாராஜனுக்குச் சொல்லியதாக வியாச முனிவர் பதினெண் புராணங்களுள் சூரிய புராணமாகிய பிரமகைவர்த்தத்திற் கூறுகின்ருர்.

அகத்திய முனிவர், இத்தலத்தை யடைந்து சிவகங் கையில் மூழ்கி, ஆண்டவனது உண்மை உருவத்தை உணர்ந்தார்.

சிவபெருமானுடைய திருக்கண்களை, விளையாட் டாகத் தன் கைகளாற் பொத்திய குற்றத்திற்காகச் சாபம் பெற்ற உமாதேவி, பூவுலகத்திற் காளி யுருவத் தோடு வாழ்ந்து வருங்காலத்தில், பெருவரத்தை ஆண்ட வனிடம் பெற்ற சண்டாசுரனின் தீச்செயல்களால், வருந்திய திருமால், பிரமன், இந்திரன் முதலிய தேவர்கள் ஆண்டவன் கட்டளைப்படி அம்மையிடம் வேண்ட, சண்டாசுரனேடு போர் செய்து கொன்று அம்மை வெற்றி பெற்ருள்.

சண்டாசுரவதம் வேண்டித் தேவர்கள் தேவியைக் கண்ட இடமே "கண்டதேவி" என்றும், அவள் தங்கி யிருக்கத் தேவர்கள் நிருமித்த கோட்டையே "தேவி கோட்டை" அல்லது தேவகோட்டை யென்றும், அவ் வம்மையே "கோட்டையம்மன்" அல்லது பத்திரகாளி யென்றும், அம்மை சண்டாசுரனை வெற்றி கொண்ட

இடமே "வெற்றியூர்" என்றும், சண்டாசுரனுடைய தேர்க்கொடி முறிந்த இடமே "கொடிக்குளம்" என்றும், அவனுடைய அம்புகள் வீழ்ந்த இடமே "மாளக் கண்டான்" என்றும், வெற்றி கண்ட தேவர்கள் பூமழை பொழிந்த இடமே "பூங்குடி" என்றும் தற்காலத்தில் வழங்கப் பெறுகின்றன.

சண்டாசுர வதத்தின் பின்னர், காளியானவள் சோதி வனத்தை யடைந்து, காளீசரைப் பூசித்துக் கரிய உருவம் நீங்கப் பெற்றுச் சுவர்ணவல்லியாகித் தூல லிங்கமாகிய சோமேசரை வழிபட்டுக் கலந்து சௌந்தர நாயகியைத் தொழுது, காளீசரை மணந்து, கருணைக் கடலாக வீற்றிருக்கின்றாள். சோதி வனத்திற்கு வந்து சிவகங்கையில் மூழ்கித் திருவருள் பெறாத் தேவர்களே இல்லை.

கங்கை நீர் கொண்டு, காளீசரை யாட்டக் கருதிய தேவதாசப் பாண்டியனுக்குச் சிவகங்கைத் தீர்த்தத்தின் பெருமையைக் காளீசர் கூறி அந்நீராடுதலையே விரும்பினர்.

வாலகில்லியரென்னும் தபோதனர்களின் சாபத்தால், மானிடவுருப் பெற்ற திருமகள், இத்தலத்தை யடைந்து வழிபட்டு முன்னை நிலையை அடைந்தாள். திருமாலின் சக்கரமாகிய சுதரிசனம், ஒரு காலத்துப் பகை மேற்சென்று மழுங்கி, இத்தலத்தை வழிபட்டு ஒளி பெற்றது. எட்டுத்திக்குப் பாலகர்களும், இத்தலத்தை வழிபட்டுப் பேறு பெற்றார்கள்.

ஆயிரங்கோடி உருத்திரர்களும் கொண்ட அகந்தையால், அம்மையார் அவர்களை அயிரை மீன்களாகும்படி சபிக்க, அவர்கள் கானப்பேரை யடைந்து சாபம் நீங்கப் பெற்றார்கள்.

வீரசேன பாண்டியனின் பிள்ளையில்லாக்குறை, இத்தலத்திற்கு வந்து வழிபட்டதும் நீங்கிற்று. வரகுண பாண்டியனை எதிர்த்த சோழமன்னனை, வெற்றிகொள்ளக் காளீசுவரர் திருவருள் செய்தார். வரகுண பாண்டியனுக்குச் சோழமன்னன் கொடுத்த "சுகந்தகேசி" என்னும் மங்கையைக் காளீசருக்கு அவன் தர, பெருமான் அவளைப் பெற்றுத் தமது இலிங்க வுருவத்திற் கலந்து கொண்டனர்.

விக்கிரம சோழன், காளீசரை வணங்கிப் புத்திரப் பேறடைந்து "தாளவனம்" என்னும் நாட்டரசன் கோட்டையில், கண்ணுடையநாயகி ஆலயத்தின் தென் பாகத்தில், தன்பெயரால் ஒரு இலிங்கம் தாபித்துப் பூசித்துப் பேறு பெற்றான்.

குருபத்தினியைப் புணர்ந்த குற்றவாளியாகிய புட்கரன் என்னும் அந்தணனது பாவம், இத்தலத்தை வழிபட நீங்கிற்று. விந்தியமலையை யடுத்த வனத்தில் திரிந்து கொண்டிருந்த ஐந்து பேய்கள், கௌதமர் சொற்படி கானப்பேரை யடைந்து வழிபட்டு நற்கதி பெற்றன.

இத்தலத்திலுள்ள உருத்திர தீர்த்தத்தில் மார்கழி மாதப் பூரணையில், கங்கை முதலிய புண்ணிய நதிகள் வந்து மூழ்கித் தங்கள் பாவங்களைப் போக்கிக் கொள்ளுகின்றன. இத்தலத்தில் கௌதம முனிவர் ஞானோபதேசம் பெற்றார்.

நந்தியெம்பெருமானிடம் தருக்குற்ற தேவேந்திரனின் வெள்ளையானை, காட்டானை யாகும்படி சாபம் பெற்று இத்தலத்தை யடைந்து தனது கொம்பினாற்றோண்டிய "ஆனைமடு" என்னும் தீர்த்தத்தில் மூழ்க்கிச் சோமேசரையும் காளீசரையும் வழிபட்டுச் சாபம் நீங்கப்பெற்றது.

கயிலேயில் தருக்குற்ற தேவேந்திரன் சிவபெருமானுற் சாபம் பெற்று, இத்தலத்தை யடைந்து சோமேசருக்கும் காளிசருக்கும் பற்பல திருப்பணிகள், திருவிழாக்கள் செய்து சாபநீக்கமும், நல் வரங்களும் பெற்ருன். ஆண்டுதோறும் வைகாசி மாதம் பூரணேயில் இந்திரன் வழிபாடு. இத்தலத்தில் நடைபெறுகின்றது.

கண்ணுவர் என்னும் அந்தணர் மகன் சுசரிதனுக்கு ஏற்பட்ட கயரோகம், ஆணேமடுவில் மூழ்கி ஆண்டவனே வழிபட நீங்கிற்று. தேவசேனனென்னும் அரசன் அறியாமையால், ஓர் முனிவரைக் கொல்ல அதனுல் அவனேச் சார்ந்த பிரமஹத்தி தோடம், இத்தலத்து வழிபாட்டால் நீங்கியது. காசிப முனிவரால் ஊமையாகும்படி பெற்ற மகாகாளனின் சாபம் இத்தலத்து நீங்கிற்று. சைவசமய பரமாசாரியராகிய சுந்தரமூர்த்தி நாயனுர் தமது தோழராகிய சேரமான் பெருமாணுயனுருடன் திருச்சுழியற் பெருமானே வணங்கி, இரவு துயிலும் பொழுது கனவிலே காளேவடிவம் தாங்கிக் கையில் பொற்செண்டு பிடித்துத் திருமுடியிற் சுழியம் அணிந்து தோன்றி "யாமிருப்பது கானப்பேர்" எனக் கூறி மறைய, உடனே நம்பியாரூரர் துயிலுணர்ந்தெழுந்து சேரர் பெருமானுடன் இத்தலத்திற்கு வந்து பணிந்து பதிகம் பாடியருளினுர்.

இன்னும் சந்திரன், தேவராதன் முதலாக இத்தலத்தை வணங்கி நற்பேறுகள் பெற்ருேர்களும் பெறுகின்றவர்களும் பெறுபவர்களும் பலர்.

இத்தல வரலாறு கந்தபுராணத்துச் சங்கர சங்கிதையில் க்ஷேத்திர காண்டத்திலும் கூறப்பெற்றுள்ளது.

நலம் பெருகுக !

திருச்சிற்றம்பலம்.

உ
சிவமயம்



"குனித்தபுருவமும் கொவ்வைச் செவ்வாயிற் குமிண்சிரிப்பும்
பனித்தசடையும் பவளம்போல் மேனியிற் பால்வெண்ணீறும்
இனித்தமுடைய எடுத்தபொற் பாதமும் காணப்பெற்ருல்
மனித்தப்பிறவி யும்வேண்டுவதே இந்தமாநிலத்தே."

★

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# திருஞான சம்பந்த மூர்த்தி சுவாமிகள் திருமுறை

---

## முதல் திருமுறை

### பண்-மேகராகக் குறிஞ்சி

திருச்சிற்றம்பலம்

கங்காளர் கயிலாய மலையாளர் கானப்பே ராளர்மங்கை
பங்காளர் திரிசூலப் படையாளர் விடையாளர் பயிலுங்கோயில்
கொங்காளப் பொழினுழைந்து கூர்வாயா லிறகுலர்த்திக் [கூதனீங்கிச்
செங்கானல் வெண்குருகு பைங்கான லிரைதேருந் [திருவையாறே

## இரண்டாந் திருமுறை

### பண்-இந்தளம்

ஆரூர் தில்லையம் பலம்வல் லம்நல்லம் வடகச் சியுமச் சிறு [பாக்கம் நல்ல
கூரூர் குடவாயில் குடந்தை வெண்ணி கடல்சூழ் கழிப்பாலை [தென்கோடி பீடார்
நீரூர் வயல்நின்றி யூர்குன்றி யூருங்குரு காவையூர் நாரையூர் [நீடு கானப்
பேரூர் நன்னீள் வயல்நெய்த் தானமும் பிதற்றாய் பிறைசூடிதன் [பேரிடமே

# மூன்றாந் திருமுறை

## பண்-கொல்லி

பிடியெலாம் பின்செலப் பெருங்கைமா மலர்தழீஇ
விடியலே தடமூழ்கி விதியினால் வழிபடும்
கடியுலாம் பூம்பொழில் கானப்பேர் அண்ணல்நின்
அடியலால் அடைசரண் உடையரோ அடியரே. 1

நுண்ணிடைப் பேரல்குல் நூபுரம் மெல்லடிப்
பெண்ணின்நல் லாளையோர் பாகமாப் பேணினான்
கண்ணுடை நெற்றியான் கருதிய கானப்பேர்
விண்ணிடை வேட்கையார் விரும்புதல் கருமமே. 2

வாவிவாய்த் தங்கிய நுண்சிறை வண்டினம்
காவிவாய்ப் பண்செயுங் கானப்பேர் அண்ணலை
நாவிவாய்ச் சாந்துளும் பூவுளும் ஞானநீர்
தூவிவாய்ப் பெய்துநின் றாட்டுவார் தொண்டரே. 3

நிறையுடை நெஞ்சுளும் நீருளும் பூவுளும்
பறையுடை முழவுளும் பலியுளும் பாட்டுளும்
கறையுடை மிடற்றண்ணல் கருதிய கானப்பேர்
குறையுடை யவர்க்கலாற் களைகிலார் குற்றமே. 4

ஏனப்பூண் மார்பின்மேல் என்புபூண் டீறிலா
ஞானப்பே ராயிரம் பேரினான் நண்ணிய
கானப்பே ரூர்தொழும் காதலார் தீதிலர்
வானப்பே ரூர்புகும் வண்ணமும் வல்லரே. 5

பள்ளமே படர்சடைப் பாற்படப் பாய்ந்தநீர்
வெள்ளமே தாங்கினன் வெண்மதி சூடினன்
கள்ளமே செய்கிலார் கருதிய கானப்பேர்
உள்ளமே கோயிலா உள்குமென் உள்ளமே. 6

மானமா மடப்பிடி வன்கையால் அலகிடக்
கானமார் கடகரி வழிபடுங் கானப்பேர்
ஊனமாம் உடம்பினில் உறுபிணி கெட எண்ணில்
ஞானமா மலர்கொடு நணுகுதல் நன்மையே. 7

வாளினன் வேலினன் மால்வரை எடுத்ததிண்
தோளினன் நெடுமுடி தொலையவே யூன்றிய
தாளினன் கானப்பேர் தலையினல் வணங்குவார்
நாளும்நாள் உயர்வதோர் நன்மையைப் பெறுவரே. 8

சிலையினல் முப்புரம் தீயெழச் செற்றவன்
நிலையிலா இருவரை நிலைமைகண் டோங்கினன்
கலையினர் புறவில்தேன் கமழ்தரு கானப்பேர்
தலையினல் வணங்குவார் தவமுடை யார்களே. 9

உறித்தலைச் சுரையொடு குண்டிகை பிடித்துச்சி
பறித்தலும் போர்த்தலும் பயனிலை பாவிகாள்
மறித்தலை மடப்பிடி வளரிளங் கொழுங்கொடி
கறித்தெழு கானப்பேர் கைதொழல் கருமமே. 10

காட்டகத் தாடலான் கருதிய கானப்பேர்
கோட்டகத் திளவரால் குதிகொளுங் காழியான்
நாட்டகத் தோங்குசீர் ஞானசம் பந்தன
பாட்டகத் திவைவலார்க் கில்லையாம் பாவமே. 11

திருச்சிற்றம்பலம்.

எக்கராம்அமண் கையருக்கெளி யேனலேன்திரு ஆலவாய்ச்
சொக்கனென்னுள் இருக்கவேதுளங் கும்முடித்தென்னன்
[முன்னிலை
தக்கசீர்ப்புக லிக்குமன்தமிழ் நாதன்ஞானசம் பந்தன்வாய்
ஒக்கவேயுரை செய்தபத்தும் உரைப்பவர்க்கிடர் இல்லையே.

திருச்சிற்றம்பலம்

*தக்கன் வேள்வி தகர்த்தருள் ஆலவாய்ச்*
*சொக்க னேயஞ்ச லென்றருள் செய்யெனை*
*எக்க ராம்அம ணர்கொளு வுஞ்சுடர்*
*பக்க மேசென்று பாண்டியற் காகவே.*

## திருநாவுக்கரசு சுவாமிகள்

## நான்காந் திருமுறை

### பண்—பழம் பஞ்சுரம்

ஆனைக் காவில் அணங்கினை ஆரூர் நிலாய அம்மானைக்
கானப் பேரூர்க் கட்டியைக் கானூர் முளைத்த கரும்பினை
வானப் பேரார் வந்தேத்தும் வாய்மூர் வாழும் வலம்புரியை
மானக் கயிலை மழகளிற்றை மதியைச் சுடரை மறவேனே.

### திருநேரிசை

ஊனப்பே ரொழிய வைத்தார் ஓதியே உணர வைத்தார்
ஞானப்பேர் நவில வைத்தார் ஞானமும் நடுவும் வைத்தார்
வானப்பேர் ஆறு வைத்தார் வைகுந்தற் காழி வைத்தார்
கானப்பேர் காதல் வைத்தார் கழிப்பாலைச் சேர்ப்ப னாரே.




## ஆருந் திருமுறை

### திருத்தாண்டகம்

சிறையார் புனற்கெடில வீரட்டமும்
திருப்பா திரிப்புலியூர் திருவாமாத்தூர்
துறையார் வனமுனிகள் ஏத்தநின்ற
சோற்றுத் துறைதுருத்தி நெய்த்தானமும்
அறையார் புனலொழுகு காவிரிசூழ்
ஐயாற் றமுதன் பழனம்நல்ல
கறையார் பொழில்புடைசூழ் கானப்பேரும்
கழுக்குன்றும் தம்முடைய காப்புக்களே.

தேனப்பூ வண்டுண்ட கொன்றையான் காண்
திருவேகம் பத்தான்காண் தேனார்ந்துக்க
ஞானப்பூங் கோதையாள் பாகத்தான்காண்
நம்பன்காண் ஞானத் தொளியா னன்காண்
வானப்பே ரூரும் அறிய வோடி
மட்டித்து நின்றான்காண் வண்டார் சோலைக்
கானப்பே ரூரான்காண் கறைக்கண் டன்காண்
காளத்தி யானவனென் கண்ணுளானே.

கடமன்னு களியானை யுரிவை போர்த்தார்
கானப்பேர் காதலார் காதல்செய்து
மடமன்னு மடியார்தம் மனத்தி னுள்ளார்
மானுரித்தோன் மிசைத்தோளார் மங்கை காண
நடமன்னி யாடுவார் நாகம் பூண்டார்
நான்மறையோ டாறங்கம் நவின்ற நாவார்
படமன்னு திருமுடியார் பைங்க ணேற்றார்
பலியேற்றார் பந்தணைநல் லூராரே.

மறைக்காட்டார் வலிவலத்தார் வாய்மூர் மேயார்
வாள்கொளி புத்தூ ரார்மா காளத்தார்
கறைக்காட்டுங் கண்டனூர் காபா லிய்யார்
கற்குடியார் விற்குடியார் கானப் பேரார்
பறைக்காட்டுங் குழிவிழிகட் பல்பேய் சூழப்
பழையனூ ராலங்காட் டடிகள் பண்டோர்
மிறைக்காட்டுங் கொடுங்காலன் வீடப் பாய்ந்தார்
வீழி மிழலையே மேவி னாரே.

ஆரூர்மூ லட்டானம் ஆனைக் காவும்
ஆக்கூரில் தான்தோன் றி மாட மாவூர்
பேரூர் பிரமபுரம் பேரா வூரும்
பெருந்துறை காம்பீலி பிடவூர் பேணும்
கூரார் குறுக்கைவீ ரட்டா னமுங்
கோட்டூர் குடமூக்குக் கோழம் பமும்
காரார்க ழுக்குன் றும் கானப் பேருங்
கயிலாய நாதனையே காண லாமே.

தேவார்ந்த தேவனைத் தேவ ரெல்லாந்
திருவடிமேல் அலரிட்டுத் தேடி நின் று
நாவார்ந்த மறைபாடி நட்ட மாடி
நான்முகனும் இந்திர னும் மாலும் போற்றக்
காவார்ந்த பொழிற்சோலைக் கானப் பேராய்
கழுக்குன்றத் துச்சியாய் கடவுளே நின்
பூவார்ந்த பொன்னடிக்கே போ துகின்றேன்
பூம்புக லூர் மேவிய புண்ணியனே.

## சுந்தரமூர்த்தி சுவாமிகள்

# ஏ ழா ந் தி ரு மு றை

### பண் – இந்தளம்

தென்னூர் கைம்மைத் திருச்சுழி யற்றிருக் கானப்பேர்
பன்னூர் புக்குறை யும்பர மர்க்கிடம் பாய்நலம்
என்னூ ரெங்கள் பிரானுறை யுந்திருத் தேவனூர்
பொன்னூர் நாட்டுப் பொன்னூர்புரிசை நாட்டுப்புரிசையே

### பண்-பழம் பஞ்சுரம்

காட்டூர்க் கடலே கடம்பூர் மலையே கானப்பேரூராய்
கோட்டூர்க் கொழுந்தே யழுந்தூ ரரசே கொழுநற் கொல்லேறே
பாட்டூர் பலரும் பரவப் படுவாய் பனங்காட்டூரானே
மாட்டூ ரறவா மறவா துன்னைப் பாடப் பணியாயே.

### பண்-புறநீர்மை

தொண்ட ரடித்தொழலுஞ் சோதி யிளம்பிறையுஞ்
சூதன மென்முலையாள் பாகமு மாகிவரும்
புண்டரிகப் பரிசாம் மேனியும் வானவர்கள்
பூச லிடக்கடல்நஞ் சுண்ட கருத்தமரும்
கொண்ட லெனத்திகழும் கண்டமு மெண்டோளும்
கோல நறுஞ்சடைமேல் வண்ணமுங் கண்குளிரக்
கண்டு தொழப்பெறுவ தென்றுகொ லோவடியேன்
கார்வயல் சூழ்கானப் பேருறை காளையையே. 1

கூத லிடுஞ்சடையுங் கோளரவும் விரவுங்
கொக்கிற குங்குளிர்மா மத்தமு மொத்துனதாள்
ஓத லுணர்ந்தடியார் உன்பெரு மைக்குநினேந்
துள்ளுரு காவிரசும் மோசையைப் பாடலும்நீ

ஆத லுணர்ந்தவரோ டன்பு பெருத்தடியேன்
அங்கையின் மாமலர்கொண் டென்கண தல்லல்கெடக்
காத லுறத்தொழுவ தென்றுகொ லோவடியேன்
கார்வயல் சூழ்கானப் பேருறை காளையையே. 2

நானுடை மாடெனவே நன்மை தரும்பரனை
நற்பத மென்றுணர்வார் சொற்பத மார்சிவனைத்
தேனிடை யின்னமுதை மற்ற தனிற்றெளியைத்
தேவர்கள் நாயகனைப் பூவுயர் சென்னியனை
வானிடை மாமதியை மாசறு சோதியனை
மாருத மும்மனலும் மண்டல மும்மாய
கானிடை மாநடனென் றெய்துவ தென்றுகொலோ
கார்வயல் சூழ்கானப் பேருறை காளையையே. 3

செற்றவர் முப்புரமன் றட்டசிலைத் தொழிலார்
சேவக முந்நினைவார் பாவகமுந் நெறியும்
குற்றமில் தன்னடியார் கூறுமிசைப் பரிசுங்
கோசிக மும்மரையிற் கோவண மும்மதளும்
மற்றிகழ் திண்புயமும் மார்பிடை நீறுதுதை
மாமலை மங்கையுமை சேர்சுவ டும்புகழச்
கற்றன வும்பரவிக் கைத்தொழ லென்று கொலோ
கார்வயல் சூழ்கானப் பேருறை காளையையே. 4

கொல்லை விடைக்கழகுங் கோல நறுஞ்சடையிற்
கொத்தல ரும்மிதழித் தொத்து மதனருகே
முல்லை படைத்தநகை மெல்லிய லாளொருபால்
மோக மிகுத்திலங்கும் கூறுசெய் எப்பரிசும்

தில்லை நகர்ப்பொதுவுற் றாடிய சீர்நடமுந்
திண்மழு வுங்கைமிசைக் கூரெரியும் மடியார்
கல்ல வடப்பரிசுங் காணுவ தென்றுகொலோ
கார்வயல் சூழ்கானப் பேருறை காளையையே. 5

பண்ணு தலைப்பயனார் பாடலு நீடுதலும்
பங்கய மாதனையார் பத்தியு முத்தியளித்
தெண்ணு தலைப்பெருமா னென்றெழு வாரவர்தம்
மேசற வும்மிறையா மெந்தையை யும்விரவி
நண்ணு தலைப்படுமா றெங்ஙன மென்றயலே
நைகிற என்னைமதித் துய்யும் வணம்மருளும்
கண்ணு தலைக்கனியைக் காண்பது மென்றுகொலோ
கார்வயல் சூழ்கானப் பேருறை காளையையே. 6

மாவை யுரித்ததள் கொண்டங்க மணிந்தவனை
வஞ்சர் மனத்திறையு நெஞ்சணு காதவனை
மூவர் உருத்தனதா மூல முதற்கருவை
மூசிடு மால்விடையின் பாகனை யாகமுறப்
பாவக மின்றிமெய்யே பற்று மவர்க்கமுதைப்
பானறு நெய்தயிரைந் தாடு பரம்பரனைக்
காவ லெனக்கிறையென் றெய்துவதென்று கொலோ
கார்வயல் சூழ்கானப் பேருறை காளையையே. 7

தொண்டர் தமக்கெளிய சோதியை வேதியனைத்
தூய மறைப்பொருளா நீதியை வார்கடனஞ்
சுண்ட தனுக்கிறவா தென்று மிருந்தவனை
யூழி படைத்தவனோ டொள்ளரி யும்முணரா

அண்டனை யண்டர்தமக் காகம நான்மொழியும்
    மாதியை மேதகுசீ ரோதியை வானவர்தம்
கண்டனை யன்பொடுசென் றெய்துவ தென்றுகொலோ
    கார்வயல் சூழ்கானப் பேருறை காளையையே. 8

நாதனை நாதமிகுத் தோசைய தானவனை
    ஞான விளக்கொளியா மூனுயி ரைப்பயிரை
மாதனை மேதகுதன் பத்தர் மனத்திறையும்
    பற்று விடாதவனைக் குற்றமில் கொள்கையனைத்
தூதனை யென்றனையாள் தோழனை நாயகனைத்
    தாழ்மக ரக்குழையும் தோடு மணிந்ததிருக்
காதனை நாயடியே னெய்துவ தென்றுகொலோ
    கார்வயல் சூழ்கானப் பேருறை காளையையே. 9

கன்னலை யின்னமுதைக் கார்வயல் சூழ்கானப்
    பேருறை காளையையொண் சீருறை தண்டமிழால்
உன்னி மனத்தயரா வுள்ளுரு கிப்பரவும்
    ஒண்பொழில் நாவலர்கோ னுகிய ஆரூரன்
பன்னு மிசைக்கிளவி பத்திவை பாடவல்லார்
    பத்தர் குணத்தினரா யெத்திசை யும்புகழ
மன்னி யிருப்பவர்கள் வானி னிழிந்திடினும்
    மண்டல நாயகராய் வாழ்வது நிச்சயமே. 10



## கல்லாட தேவ நாயனுர் அருளிச் செய்த

# திருக்கண்ணப்பதேவர் திருமறம்

## பதினொராந் திருமுறை

பரிவின் றன்மை யுருவுகொண் டனையவன்
போழ்வார் போர்த்த தாழகச் செருப்பினன்
குருதி புலராச் சுரிகை யெஃகம்
அரையிற் கட்டிய வுடைத்தோற் கச்சையன்
தோல்நெடும் பையில் குறுமயிர் திணித்து
வாரில் வீக்கிய வரிக்கை கட்டியன்
உழுவைக் கூ னுகிர் கேடில்வெண் மருப்பு
மாறுபடத் தொடுத்த மாலை யுத்தரியன்
நீலப் பீலி நெற்றி சூழ்ந்த
கானக் குஞ்சிக் கவடி புல்லினன்
முடுகு நாறும் குடிலை யாக்கையன்
வேங்கை வென்று வாகை சூடிய
சங்கரன் தன்னினத் தலைவ னேங்கிய
வில்லும் அம்பும் நல்லன தாங்கி
யேற்றுக் கல்வனங் காற்றினி லியங்கிக்
கணையில் வீழ்த்துக் கருமா வறுத்துக்
கோலி னேற்றிக் கொழுந்திக் காய்ச்சி
நாவில் வைத்த நாட்போ னகமும்
தன்றலைச் சொருகிய தண்பளித் தாமமும்
வாய்க்கல சத்து மஞ்சன நீருங்
கொண்டு கானப் பேருறை கண்ணுதல்
முடியிற் பூசை யடியா நீக்கி
நீங்காக் குணத்துக்
கோசரிக் கன்றவ னேசங் காட்ட
முக்கண் அப்பனுக் கொருகணி லுதிரம்
தக்கி ணத்திடை யிழிதர வக்கணம்



அழுது விழுந்து தொழுதெழுந் தரற்றிப்
புன்மருந் தாற்றப் போகா தென்று
தன்னை மருந்தென்று மலர்க்கண் அப்ப
ஒழிந்தது மற்றை யொண்டிரு நயனம்
பொழிந்த கண்ணீர்க் கலுழி பொங்க
அற்ற தென்று மற்றக் கண்ணையும்
பகழித் தலையால் அகழ வாண்டகை
யொருகை யாலும் இருகை பிடித்து
வொல்லை நம்புண் ணொழிந்தது பாராய்
நல்லை நல்லை யெனப் பெறுந்
திருவேட்டு வர்தந் திருவடி கைதொழக்
கருவேட் டுழல் வினைக் காரியம் கெடுமே.

## கபிலதேவ நாயனர் அருளிச் செய்த சிவபெருமான் திருவந்தாதி.

முலைநலஞ்சேர் கானப்பேர் முக்கணு னென்னு
முலைநலஞ்சேர் மொய்சடையானென்னு-முலைநலஞ்சேர்
மாதேவா வென்று வளர்கொன்றை வாய்சோர
மாதேவா சோரல் வளை.

## பரண தேவ நாயனர் அருளிச் செய்த சிவபெருமான் திருவந்தாதி.

நிலைத்திவ் வுலகனைத்து நீரேயாய் நின்றீர்
நிலைத்திவ் வுலகனைத்து நீரே-நிலைத்தீரக்
கானப்பே ரீர்கங்கை சூடினீர் கங்காளீர்
கானப்பே ரீர்கங்கை யீர்.

# பன்னிரண்டாந் திருமுறை

## திருநாவுக்கரசு நாயனார் புராணம்.

அங்குறைந்து கண்ணுதலா ரடிசூடி யகன்றுபோய்ப்
பொங்கு தமிழ்த் திருநாட்டுப் புறம்பணைசூழ் நெல்வேலி
செங்கண்விடை யார்மன்னுந் திருக்கானப் பேர்முதலா
வெங்குரிகழ் தானங்க ளெல்லாம்புக் கிறைஞ்சுவார்.

## திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார்

## புராணம்.

பற்றார்தம் புரங்கண்மலைச் சிலையாற் செற்ற
 பரமனார் திருப்புத்தூர் பணிந்து போந்து
புற்றாரும் பணிபூண்ட புனிதனார்தம்
 பூவணத்தைப் புக்கிறைஞ்சிப் புகழ்ந்து பாடிக்
கற்றார்கள் தொழுதேத்துங் கானப் பேருங்
 கைதொழுது தமிழ்பாடிச் சுழியல் போற்றிக்
குற்றாலங் குறும்பலாக் கும்பிட் டேத்திக்
 கூற்று தைத்தார் நெல்வேலி குறுகினாரே.

## சேரமான் பெருமாணாயனார் புராணம்.

அங்கணரைப் பணிந்துறையு மாரூரர்க் கவ்வூரிற்
கங்குலிடைக் கனவின்கட் காளையாந் திருவடிவாற்
செங்கையினிற் பொற்செண்டுந் திருமுடியிற் சுழியமுட
னெங்குமிலாத் திருவேட மென்புருக முன்காட்டி

கானப்பேர் யாமிருப்ப தெனக்கழறிக் கங்கையெனும்
வானப்பே ராறுலவு மாமுடியார் தாமகல
ஞானப்பே ராளருணர்ந் ததிசயித்து நாகமுட
னேனப்பே ரெயிறணிந்தா ரருளிருந்த பரிசென்பார்

கண்டருளும் படிகழறிற் றறிவார்க்கு மொழிந்தருளிப்
புண்டரிகப் புனற்சுழியற் புனிதர்கழல் வணங்கிப்போய்
அண்டர்பிரான் திருக்கானப் பேரணைவார் ஆரூரர்
தொண்டரடித் தொழலுமெனுஞ் சொற்பதிகத்
[தொடைபுனைவார்

காளையார் தமைக்கண்டு தொழப்பெறுவ தென்றென்று
தாளைநா ளும்பரவத் தருவார்பாற் சார்கின்று
ராளைநீ ளிடைக்காண வஞ்சியநீர் நாயயலே
வாழைபாய் நுழைப்பழன முனைப்பாடி வளநாடர்

மன்னுதிருக் கானப்பேர் வளம்பதியில் வந்தெய்திச்
சென்னிவளர் மதியணிந்தார் செழுங்கோயில் வலங்கொண்டு
முன்னிறைஞ்சி யுள்ளணைந்து முதல்வர்சே வடிதாழ்ந்து
பன்னுசெழுந் தமிழ்மாலை பாடினுர் பரவினுர்

ஆராத காதலுடன் அப்பதியிற் பணிந்தேத்திச்
சீராருந் திருத்தொண்டர் சிலநாளங் கமர்ந்தருளிக்
காராரு மலர்ச்சோலைக் கானப்பேர் கடந்தணைந்தார்
போரானேற் ருர்கயிலைப் பொருப்பர்திருப் புனவாயில்

உமாபதி சிவாசாரியர் அருளிச் செய்த

# திருப்பதிகக் கோவை.

குருகாவூர் திருவேள்விக் குடிவிசய மங்கை
குற்ருலங் குடமூக்குக் கோட்டாறு பனையூர்
கருகாவூர் குரங்காடு துறையோமாம் புலியூர்
கண்டியூர் வேதிகுடி கானூர்கோ கரணம்
திருவாரு ரானெறிபங் தணைநல்லூர் நல்லங்
திருக்கண்டீச் சரந்தேவூர் திருச்சிராப் பள்ளி
பெருவேளூர் கீழ்வேளூ ரெறும்பியூர் கானப்
பேர்திருமங் கலக்குடியாக் கூர்கோவ லூரே

ஆலவா யாப்பனூர் பரங்குன்றே டகத்தோ
டருங்கொடுங்குன் றந்திருப்புத் தூர்புனவா யிலிடே
டேலுமிரா மேச்சரமா டானை கானப்பே
ரெழிற்றிருப்பூ வணஞ்சுழிய லின்புறுகுற் ருலம்
பாலலோ சனன்றிருநெல் வேலியொடு பாண்டி
பதினுன்குமலை நாட்டிலஞ்சைக் களமொன்றே
சீலமிகு மவிநாசி திருமுருகன் பூண்டி
திருநணு கொடிமாடச் செங்குன்றூர் தானே.

# திருவிளையாடற் புராணம்.

## அருச்சனைப் படலம்.

சரதவேதம் பரவுபுன வாயினகருந் தவசித்தர்
இரதவாதஞ் செய்துசிவ னுருவங்கண்ட வெழினகரும்
வரதனுகி யரனுறையுங் கானப்பேரு மலைமகளை
விரதயோக நெறிநின்று மணந்தார் சுழியல் வியனகரும்.

## திருப்புகழ்.

அனத்தோ டொப்பா மெனுநடை மடவியர் அநுராகம்
அதற்கே சிச்சீ இனமென துயிர்கெட அழகாமோ
உனைப்பா டிப்பே றுறுமொரு வரமினி உதவாயோ
உவப்பா கத்தே வர்கள்சிறை விடவிடும் அயிலோனே
முனைப்பா டிக்கே திரிதரும் அரிதிரு மருகோனே
முகிற்கே நத்தா விரிதரு கலபநன் மயிலோனே
தினைக்கா வற்கே உரியவள் மனமகிழ் மணவாளா
திருக்கா னப்பேர் நகர்தனி லினிதுறை பெருமாளே.

கோலக் காதிற் குழையாலே கோதிச் சேர்மைக் குழலாலே
ஞாலத் தாரைத் துயரேசெய் நாரிக் காசைப் படலாமோ
மேலைத் தேவர்க் கரியோனே வீரச் சேவற் கொடியோனே
காலப் பாசத் துயர்தீராய் கானப் பேரிற் பெருமானே.

திருச்சிற்றம்பலம்.




---

